உ

சிவ சிவ

# திருஇராமேச்சுரம்
# அருள்மிகு இராமநாத சுவாமி திருக்கோயில்
# குடமுழுக்கு விழா மலர்

❀ ❀ ❀



திருப்பனந்தாள் காசித்திருமடத்தின் அதிபர்,
"கயிலைமாமுனிவர்"
திருவளர்திரு
காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள்
அருளாணையின்வண்ணம் வெளியிடப்பட்டது.

**வெளியீடு**

திருப்பனந்தாள் காசித்திருமடம்,
இராமேச்சுரம் கிளை.

05.02.2001

உ

சிவசிவ

# திருஇராமேச்சுரம்
# அருள்மிகு இராமநாத சுவாமி திருக்கோயில்
# குடமுழுக்கு விழா மலர்

***

திருப்பனந்தாள் காசித்திருமடத்தின் அதிபர்
''கயிலைமாமுனிவர்'' திருவளர்திரு
**காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்**
அருளாணையின்வண்ணம் வெளியிடப்பட்டது.



**05.02.2001**

திருப்பனந்தாள் காசித்திருமடம்,
இராமேச்சுரம் கிளை.

63-2

உ
சிவ சிவ

# முன்னுரை

திருச்சிற்றம்பலம்

அலைவளர் தண்மதியோடு அயலே அடக்கி உமை
முலைவளர் பாகம் முயங்க வல்ல முதல்வன் முனி
இலைவளர் தாழைகள் விம்மு கானல் இராமேச்சுரம்
தலைவளர் கோல நல்மாலையன் தான் இருந்து ஆட்சியே.

- திருஞானசம்பந்தர்.

எல்லாம் வல்ல சிவபரம்பொருள் உயிர்கள் உய்யும் பொருட்டுப் பல்வேறு திருப்பெயர்கள் தாங்கிப் பாரத நாட்டின் பல்வேறு தலங்களுள் கோயில்கொண்டு அருள்பாலித்து வருகிறார். அவ்வாறு உள்ள பல தலங்களுள் மூவர் பெருமக்களால் பாடப்பெற்ற தலங்கள் 276 ஆகும். அவற்றுள் சிறந்த சில தலங்களுள் ஒன்றாகக் கருதப்படும் தலம் இராமேச்சுரம். இராமபிரான் வழிபட்டுப் பாவ நீக்கம் பெற்ற இராமநாதப் பெருமான் கோயில் கொண்டுள்ள இத்தலம் பாரத நாட்டின் அனைத்துப் பகுதியினரும் வழிபட்டு அருள்பெறும் அற்புதத் தலமாகும்.

''மூர்த்தி தலம் தீர்த்தம் முறையால் தொடங்கினர்க்கு ஓர்
வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே''

எனும் தாயுமானார் வாக்கிற்கு ஏற்ப மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய மூன்றாலும் சிறப்புப்பெற்று உயர்ந்தது இராமேச்சுரமாகும். இராமாயண காலம் முதல் சிறப்புற்றிலங்கும் பழம் பெருமை வாய்ந்தது இத்தலம். இத்தகைய பெருமைக்குரிய இராமநாத சுவாமித் திருக்கோயில் குடமுழுக்கு விழா 5.2.2001-இல் சீரோடும் சிறப்போடும் நடைபெறுகிறது. இக்குடமுழுக்கு விழாவையொட்டி இத்தலம் பற்றிய விவரங்களும் அடியவர்க்குக் கிடைக்குமாறு செய்யவேண்டும் எனத் திருப்பனந்தாள் காசித் திருமடத்தின் 21-ஆவது அதிபர், ''கயிலைமா-முனிவர்'' திருவளர்திரு காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் திருவுளம் பற்றினார்கள். அவர்கள்

திருவுளப்பாங்கின்வண்ணம் இக்குடமுழுக்கு விழா மலர், இராமேச்சுரத்திலுள்ள, திருப்பனந்தாள் காசித் திருமடத்தின் சார்பில் வெளியிடப்பெறுகின்றது.

இம்மலருள் இராமேச்சுரம் பற்றிய விவரங்களும், திருக்கோயில் மற்றும் தீர்த்தங்கள் பற்றிய செய்திகளும் இத்தலத்தைப் பற்றிய தேவாரத் திருப்பதிகங்களும், பிற அருளாளர்கள் போற்றிப் பாடிய அருட்பாடல்கள் சிலவும் தொகுத்து அளிக்ககப்பட்டுள்ளன.

திருக்கோயில் குடமுழுக்கு விழாவினைக் கண்டு, பெருமானை வழிபட்டு அருள்பெற வந்துள்ள அன்பர்க்கும் அவர்தம் குடும்பத்தார்க்கும் தீர்க்காயுளும் சிவஞானமும் மேன்மேலும் பெருக இராமநாதப்பெருமான் திருவருள்புரிவாராக.

அடியவர் பெருமக்கள் பயன்பெற வேண்டும் எனும் பெருங்கருணையோடு இந்நூலை வெளியிடத்திருவுளம் பற்றிய கயிலைமாமுனிவர் திருவளர்திரு காசிவாசி எஜமான் சுவாமிகட்குச் சைவ உலகம் என்றும் கடப்பாடுடையது.

''நாடும் நகரமும் நல்திருக் கோயிலும்
தேடித் திரிந்து சிவபெருமான் என்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாய்க் கொள்வனே''

எனும் திருமூலர் திருவாக்கிற்கு இணங்க இந்நூலைப் பெறும் அன்பர்கள், இராமேச்சுரம் பற்றிய விவரங்களை அறிந்துகொண்டு, இத்திருக்கோயிலைச் சிவபெருமானே என வணங்கி, இராமநாதப் பெருமான் திருவருளுக்கு உரியராவராக!

இத்தெய்வத் திருப்பணியில் எளியேனையும் ஈடுபடுத்திச் சிவபுண்ணியப் பெரும்பேறு பெற வாய்ப்பளித்த ''கயிலைமாமுனிவர்'' திருவளர்திரு காசிவாசி எஜமான் சுவாமிகள் திருவடிகட்கு எளியேனுடைய சிரம் தாழ்த்திய நல்வணக்கங்கள்.

அருளாணையின்வண்ணம்,

திருப்பனந்தாள்,
5.1.2001.

அ. பாலசுப்பிரமணியன்,
(குறிஞ்சிப்புலவர்).

உ

சிவ சிவ

## திருஇராமேச்சுரம்

திங்களம் குழவிள்னத் திகழொரு மருப்பிற்சோதி
தங்குகிம் புரிவயங்கத் தடாமணி மகுடம் தாங்கித்
துங்கநல் வரங்கள்நல்கும் தூய சீர் இராமசேதுப்
புங்கவர் வணங்கும் யானை முகத்தனைப் போற்றல் செய்வாம்.

அங்கு இங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்து தன் அருள்வெளிக்குளே அகிலாண்டகோடி எலாம் தங்கும்படிக்கு இச்சை வைத்து, உயிர்க்கு உயிராய்த் திகழும் பரம்பொருளாய சிவபிரான் எண்பத்து நான்கு நூறாயிரம் யோனி பேதங்களையும் படைத்துக் காத்துக் கரந்து விளையாடும் அலகிலா விளையாட்டுடையராய்த் திகழ்கிறார். வானாகி, மண்ணாகி, வளியாகி, ஒளியாகி ஊனாகி, உயிராகி, உண்மையுமாய் இன்மையுமாய் விளங்கும் ஆதியும், அந்தமும் இல்லா அரும்பெரும் சோதியாய்ப் பார்க்கும் இடம் எங்கும் நீக்கமற நிற்கும் பரம்பொருளாய் விளங்குகிறார்.

ஆயினும் உயிர்த் தொகுதிகள் யாவும் வினை மாசு அகன்று தம் திருவடியில் ஈறிலா இன்பமுடன் வாழவேண்டும் எனும் பெருங் கருணையினால், உயிர்கள் வழிபட்டு உய்ந்து பேரின்பப் பெருவெள்ளத்தில் கலந்து இன்பமுற வேண்டும் எனத் திருவுளம்பற்றி உலகம் முழுதும் பல இடங்களில் திருக்கோயில்கொண்டு அருள்பாலித்து வருகிறார். எந்நாட்டவர்க்கும் இறைவராக விளங்குபவர் ஆயினும் குறிப்பாகத் தென்னாட்டில் சிறப்பாகப் பல தலங்களில் பல்வேறு திருப்பெயர் தாங்கித் தம்மை வழிபடும் அடியவர்க்குக்-கருணையுடன் அருள்பாலித்து வருகிறார்.

அவ்வாறு பல கோயில்களில் உறைபவராயினும் சிறப்பாகப் பல தலங்களில் பெருஞ்சிறப்புடன் விளங்குகிறார். அவ்வகைப்பட்ட பல தலங்களுள் பூழியர்கோன் வெப்பு ஒழித்த புகலியர் கோவாம் ஞானசம்பந்தப்பெருமான், ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்த பிரானாகிய நாவரசர், நாவலூர்ப்-பெருமானாகிய வன்தொண்டராம் சுந்தரர் ஆகிய மூவர் முதலியரால் வழிபடப்பட்டுப் பதிகங்கள் பாடப்பட்ட தலங்கள் 276 ஆகும். அவற்றுள் மிகச்சிறந்தனவாகக் கருதப்படும் சில தலங்களுள் திருஇராமேச்சுரமும் ஒன்றாகும்.

''காசி முதல் இராமேச்சுரம் வரை'' என வழங்கும் வழக்கு இராமேச்சுரத்தின் சிறப்பினை உணர்த்தும். இராவணனைக் கொன்ற பாவம் தீர, அஞ்சன வண்ணனாகிய இராமபிரான் சிவலிங்கம் அமைத்து வழிபட்ட பெருமையுடையது இராமேச்சுரம். இராமர் வழிபடுவதற்காகக் கயிலையிலிருந்து சிவலிங்கம் கொணரச் சென்ற அனுமன் வரக் காலதாமதமாகவே, சீதாப்பிராட்டியார் மணலால் இலிங்கம் ஒன்று அமைத்துத்தர இராமர் அதனை வழிபட்டுப் பாபநீக்கம் பெற்றார். இம்மூர்த்தியே இராமேச்சுர மூல மூர்த்தியாவர். இராமர் வழிபட்டமையால் இவர் இராமநாதர் எனத் திருப்பெயர் பெற்றார். இத்திருப்பெயர் சைவ, வைணவ சமயங்களை இணைக்கும் பெருமைபெற்று விளங்குகிறது. காலம் தாழ்த்தி அனுமன் கொணர்ந்த இலிங்கம், ''விசுவலிங்கம்'' எனும் பெயரால் பக்கத்திலேயே பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது.

இத்தலத்தை அடுத்துள்ள தனுஷ்கோடி(சேது)யிலிருந்தே இராமர் இலங்கைக்குப் பாலம் அமைத்து இலங்கைசென்று இராவணனை அழித்ததாகக் கூறுவர். தனுஷ்கோடியில் வங்கக் கடலும், இந்துமாக் கடலும் சங்கமிக்கும் இடம் உள்ளது. இராமனது வில் முனையால் அடையாளம் காட்டப்பட்ட இடமாதலின் தனுஷ்கோடி எனப் பெயர்பெற்றது என்பர். (தனுஷ்-வில்; கோடி-முனை) (சேது-பாலம்). இராமர் இராவணனைக் கொன்ற பழிதீர வழிபட்ட தலம் இராமேச்சுரம் என்பதைச் சம்பந்தரும், அப்பரும் தம் பதிகங்களில் குறித்திருப்பது இவ்வுண்மையை வலியுறுத்தும்,

''தேவியை வவ்விய தென் இலங்கைத் தச மாமுகன்
பூவியலும் முடி பொன்றுவித்த பழி போய் அற
ஏவியலும் சிலை அண்ணல் செய்த இராமேச்சுரம்''

எனவும்,

''அணை அலை சூழ்கடல் அன்று அடைத்து வழிசெய்துஅவன்
பணை இலங்கும் முடிபத்து இறுத்த பழிபோக்கிய
இணையிலி என்றும் இருந்த கோயில் இராமேச்சுரம்''

எனவும் வரும் ஞானசம்பந்தர் வாக்குகள் இவ்வரலாற்றுக்கு அகச்சான்றுகளாய் உள்ளன. மேலும்,

''வரைகள் ஒத்தே உயர்ந்த மணிமுடி அரக்கர் கோனை
விரைய முற்றற ஒடுக்கி மீண்டு மால் செய்த கோயில்
திரைகள் முத்தால் வணங்கும் திரு இராமேச்சுரத்தை''

எனவரும் அப்பர் வாக்கும் இதனை மெய்ப்பிக்கும்.

ஜோதிர் லிங்கத் தலம்:-

பாரத நாட்டில் உள்ள 12 ஜோதிர் லிங்கத் தலங்களுள் இராமேச்சுரமும் ஒன்றாகும். இவ்வொரு ஜோதிர் லிங்கத் தலமே தமிழ்நாட்டில் உள்ளது. எஞ்சிய பதினொரு தலங்களும் வடநாட்டில் உள்ளன. அவை காசி (விசுவநாதம்); கேதாரம் (கேதாரநாதம்); சோமநாதம்; உஜ்ஜயினி (மகாகாளேசுவரம்); ஓங்காரம் (ஓங்காரநாதம்); வைத்தியநாதம், பீமசங்கரம் (பீமநாதம்); நாகேசம் (நாகநாதம்); திரியம்பகம், குசுமேசம், ஸ்ரீசைலம் (மல்லிகார்ச்சுனம்) ஆகியவையாகும்.

ஆகவே இவ்வாறு பல்லாற்றாலும் பெருமைபொருந்திய இராமேச்சுரம் இராமாயண காலம் முதல் சிறந்துவிளங்கும் மிகமிகப் பழைய தலம் என்பது விளங்கும். பாண்டிய நாட்டில் அமைந்துள்ள தேவாரப் பாடல்பெற்ற 14 தலங்களுள் சிறந்த ஒன்று இவ்விராமேச்சுரம் ஆகும்.

பாண்டியநாட்டில் உள்ள பாடல்பெற்ற தலங்களை,

''கூடல், புனல்வூயில், குற்றாலம், ஆப்பனூர்
ஏடகம், நெல்வேலி, இராமேசம் - ஆடானை
தென்பரங்குன்றம், சுழியல், தென்திருப்புத்தூர், காளை,
வன்கொடுங் குன்றம் பூவணம்''

எனும் பாடல் மூலம் அறியலாம்.

## இருப்பிடம்:-

தெய்வத் தென்தமிழ்நாட்டில் இராமநாதபுரத்திற்குத் தென்கிழக்கில் சுமார் 53 கி.மீ. தூரத்திலும், மதுரையிலிருந்து 160 கி.மீ. தூரத்திலும் இராமேச்சுரம் அமைந்துள்ளது. தீவாக அமைந்துள்ள இராமேச்சுரப் பகுதியைக் குறுகிய கடல் பகுதி ஒன்று பெருநிலப் பகுதியிலிருந்து பிரிக்கிறது. இக்கடல் பகுதியில்தான் புகழ்மிக்க பாம்பன் பாலம் அமைந்துள்ளது. சென்னை, கோவை, மதுரை ஆகிய பெருநகரங்களிலிருந்து இரயில் மூலம் இத்தலத்தை அடையலாம். சென்னை, மதுரை, திருச்சி, தஞ்சை முதலிய பல நகரங்களிலிருந்து பேருந்து மூலமும் இத்தலத்தை அடையலாம்.

இராமேச்சுரத்திற்குத் தெற்கே 20 கி.மீ. தூரத்தில் தனுஷ்கோடி (சேது) நீராடும் துறை அமைந்துள்ளது. தனுஷ்கோடிக்கு இராமேச்சுரத்திலிருந்து தனியார் வாகனங்களில் செல்லலாம்.

## திருக்கோயில்

இராமநாத சுவாமி திருக்கோயில் கிழக்கு நோக்கிய சந்நிதியாக அமைந்துள்ளது. கோயிலைச் சுற்றித் தேரோடும் வீதிகள் உள்ளன. நாற்புறமும் வாயில்களைக் கொண்ட இத்திருக்கோயில் கிழக்குச் சந்நிதியிலும், மேற்குச் சந்நிதியிலும் கோபுரங்கள் உள்ளன. கிழக்குக் கோபுரம் 126 அடி உயரமும், மேலக்கோபுரம் 76 அடி உயரமும் உடையன. கிழக்கு நோக்கிய அம்பாள் சந்நிதிக்கு நேரே ஒரு வாயில் உள்ளது.

கீழைக் கோபுர வாயில் வழியே உள்ளே செல்லும் வழியில் உள்ள அனுப்பு மண்டபத்தின் முகப்பில் வலப்புறம் ஆஞ்சநேயர் சந்நிதி தென்திசை நோக்கி அமைந்துள்ளது. சற்றுப் பெரிய உருவாகக் காணப்படும் ஆஞ்சநேயரின் திருமேனி செம்மை நிறமாகக் காணப்படுகிறது. அவரைச் சேவித்து அனுப்பு மண்டபம் வழியாகக் கோவிலுக்குள் சென்றால் கொடிமரத்தை அடையலாம். அங்குச் சுதையாலான மிகப்பெரிய நந்தி உள்ளது. நந்தி மண்டபத்தில் இருபுறமும் மதுரையை ஆண்ட விசுவநாத நாயக்கர், கிருஷ்ணம நாயக்கர் உருவங்கள் உள்ளன. உள் செல்லும் வாயிலின் இருபுறங்களிலும் விநாயகர், முருகன் சந்நிதிகள் கிழக்கு நோக்கி அமைந்துள்ளன.

இவர்களை வணங்கி உள்சென்று முதல் பிராகாரத்தை அடையலாம். இத்திருச்சுற்றின் தென்கிழக்குப் பக்கத்தில் சூரியன், உஷா, பிரத்யுஷா, சகஸ்ரலிங்கம் ஆகியோர் சந்நிதிகள் உள்ளன. கருவறையின் தெற்குச் சுவரில் இறைவனின் திருக்கயிலாயக் காட்சி அற்புதமான சிற்பமாகக் காட்சிதருகிறது. தெற்குப் பிராகாரத்தில் நால்வர், அறுபத்து மூவர் திருமேனிகள் உள்ளன. மேற்குச் சுற்றில் வச்சிரேசுவரர் மனோன்மணி, சங்கரநாராயணர், முருகன், அர்த்தநாரீசுவரர், சந்திரசேகரர் ஆகிய மூர்த்தங்கள் உள்ளன. வடக்குப் பிராகாரத்தில் ஏகாதசருத்ரர் (11 இலிங்கங்கள்), விசாலாட்சி, ஜோதிர்லிங்கம், ஆடல்வல்லான் சந்நிதிகள் உள்ளன. நடராசர் சந்நிதியில் இரு நடராசர் உருவங்கள் உள்ளன. ஒரு திருஉருவில் கீழே உள்ள முயலகன் நேரே நோக்கிப் - படுத்திருப்பதுடன், கால்கள் பின்புறமாக உள்ளன. கிழக்குச் சுற்றின் வடபுறத்தில் சந்திரன், உரோகிணி உருவங்கள் உள்ளன.

இப்போது நேராக இராமநாத சுவாமி திருமுன் அடையலாம். இராமலிங்கேசர் கிழக்கு நோக்கி அருள்பாலிக்கிறார். இச்சந்நிதிக்கு வடபுறம் அநுமன் தாமதமாகக் கொணர்ந்த காசிவிசுவநாதர் சந்நிதி அமைந்துள்ளது. முதலில் இம் மூர்த்திக்கே பூசைகள் நடைபெறுகின்றன. இராமநாதர் சந்நிதி முன் மண்டபத்தின் தென்புறத்தில் இராமர், சீதை, இலக்குவர் ஆகியோரின் திருவுருவங்கள் உள்ளன.

முன்னால் சுக்கிரீவன் கையை வாயருகில் வைத்துக்கொண்டு வணங்கி இராமனிடம் விண்ணப்பம் செய்வதுபோன்ற உருவம் உள்ளது. அநுமார் இருகைகளிலும் இலிங்கங்களை வைத்துக்-கொண்டு நிற்கிறார். இவ்வுருவங்களுக்கு எதிரில் தெற்கு நோக்கித் தனியே ஓர் ஆஞ்சநேயர் உருவம் உள்ளது.

இங்குள்ள உற்சவ நந்திகேசுவரர் கைகள் கூப்பி, இரு கைகளில் மான் மழுவுடன் அற்புதமாகக் காட்சிதருகிறார். மான் மழுக்களை மறைத்துவிட்டுப் பார்த்தால் அநுமார் போன்று காட்சி தருகிறார். வால்கூட அநுமார் வால்போல் தொடையில் ஒட்டியுள்ளது. இத்தல வரலாற்றிற்கேற்ப நந்தியெம்-பெருமானையும், அநுமானையும் ஒரே உருவத்தில் சிற்பி அமைத்திருப்பது அற்புதமாகும்.

**அம்பாள் சந்நிதி:-**

இராமநாதரை வழிபட்டபின் முதல் தென் பிராகாரத்திலுள்ள வாயில் வழியாக அம்பாள் சந்நிதியை அடையலாம். கிழக்கு நோக்கி அருள்பாலிக்கும் அம்மை பர்வத வர்த்தினி எனவும்; மலைவளர்காதலி எனவும் வழங்கப்படுகிறார். அழகு மிகுந்த, அருள்நிறைந்த அருமையான திருவுருவம். அம்பாள் சந்நிதியில் உள்ள ஸ்ரீசக்கரம் மிகவும் சக்திவாய்ந்த ஒன்றாகும். அனைவரும் வழிபட்டுப் பயன்பெறத்தக்கது.

பிராகாரத்தின் தென்கிழக்கு மூலையில் கல்யாணசுந்தரர் கிழக்குநோக்கிக் காட்சிதருகிறார். அருகில் பிரமன், திருமால் உருவங்கள் உள்ளன. மேற்குத் திருச்சுற்றில் சௌபாக்கிய கணபதி, சந்தான கணபதி ஆகியோர் உள்ளனர். வடமேற்குப் பகுதியில் பள்ளிகொண்ட திருமால் சேவை சாதிக்கிறார். இவர் வானத்தை நோக்கிய திருமுக மண்டலத்துடன் பள்ளிகொண்டுள்ளார்.

அம்மை சந்நிதிக்கு முன் சுக்கிரவார மண்டபம் உள்ளது. இதில் அஷ்டலட்சுமி உருவங்கள் உள்ளன. மண்டபத்தின்

வடபக்கம் உள்ள எட்டுத் தூண்களில் மனோன்மணி, மகேந்திரி, கௌமாரி, இராஜராஜேஸ்வரி, இலட்சுமி, காளி, சாமுண்டி, துவாரபாலிகா உருவங்கள் உள்ளன. இம்மண்டபம் கடந்து கிழக்கே வந்தால் சந்நிதிக்கு இருபுறமும் உள்ள தூண்களில் விஜயரகுநாதசேதுபதி, வடுகநாததேவர் முதலிய பலரது உருவங்கள் உள்ளன. இங்குள்ள தூண் ஒன்றில் அமைந்துள்ள நரசிம்ம அவதாரச் சிற்பம் அழகாக உள்ளது.

**சேதுமாதவர்:-**

இராமநாதர் சந்நிதிக்குப் பின்புறம் இரண்டாவது மூன்றாவது பிராகாரங்களுக்கு இடையே சேதுமாதவர் சந்நிதி அமைந்துள்ளது. வெண்சலவைக் கல்லால் அத்திருவுரு செய்யப்பட்டதால் வெண்மை நிறமுடன் காட்சிதருகிறது. எனவே இதனைச் சுவேத (வெண்மையான) மாதவர் என வழங்குகின்றனர்.

**இராமலிங்கப்பிரதிஷ்டை:-**

மூன்றாம் பிராகாரத்தின் வடமேற்கு மூலையில் இராமலிங்கப் பிரதிஷ்டை நிகழ்ச்சியைத் தத்ரூபமாகக் காணும் வகையில் சுதையாலான உருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இராமர், சீதை, சிவலிங்கப் பிரதிட்டை செய்வதும், அநுமன் இலிங்கங்களை இரு கைகளிலும் ஏந்திவருவதும் அழகாக அமைக்கப்பட்டுள்ளன. சுக்கிரீவன், வீடணன் உருவங்களும் உள்ளன.

**பிராகாரங்கள்:-**

இத்திருக்கோயில் அமைந்துள்ள பிராகாரங்கள் சிறப்புடையவை. இருபுறங்களிலும் ஐந்தடி உயரமுள்ள மேடையின்மேல் தூண்கள் வரிசையாக நிறுத்தப்பட்டு இப்பிராகாரங்கள் அமைந்துள்ளன. மூன்றாவது வெளிப்-பிராகாரம் உலகிலேயே மிக நீண்டது ஆகும். தெற்கு , வடக்கு பிராகாரங்கள் ஒவ்வொன்றும் 640 அடி நீளமும், கிழக்கு மேற்குப்-பிராகாரங்கள் ஒவ்வொன்றும் 400 அடி நீளமும் உடையன.

இத்திருச்சுற்றில் அழகிய வேலைப்பாடுடைய ஆயிரத்து இருநூறு தூண்கள் உள்ளன. இப்பிராகாரத்தின் உயரம் 30 அடியாகும். மற்ற இரு சுற்றுகளும் இவ்வாறே அழகியனவாக அமைந்துள்ளன.

**திருக்கோயில் வரலாறு:-**

மிகப்பழங்காலத்தில் மிகச்சிறிய கொட்டகையாகக் கோயில் இருந்ததாகவும், துறவி ஒருவரின் பராமரிப்பில் இருந்ததாகவும் கூறுகின்றனர். இப்போது உள்ள கோயில் பல நூற்றாண்டுகளில் பலரால் திருப்பணி செய்யப்பட்டுத் திகழ்கிறது. இக்கோயில் திருப்பணியில் பெரும்பங்குவகித்தோர் இராமநாதபுரம் சேதுபதி மன்னர்களேயாவர்.

இராமநாதர் கருவறையையும், அம்மை கோயிலையும் இலங்கை மன்னன் பராக்கிரபாகு என்பவன் கி.பி.12-ஆம் நூற்றாண்டில் கட்டினான் என்பர். கோயிலின் தெற்கு இரண்டாம் பிராகாரத்தை 16-ஆம் நூற்றாண்டில் திருமலை சேதுபதி கட்டினார். அம்பாள் சந்நிதியின் வாயிலின் பக்கம் அவருடைய சிலையும், அவர் மகன் இரகுநாத சேதுபதி உருவமும் உள்ளன.

வெள்ளிக்கிழமை இரவுதோறும் அவற்றுக்கு மாலை சூட்டிச் சிறப்பு செய்யப்படுகிறது. 22 அடி நீளமும், 12 அடி அகலமும், 17 அடி உயரமும் உடைய பெரிய நந்தி சிலையும், மண்டபமும் மதுரை மன்னர் விசுவநாத நாயக்கராலும், குறுநில மன்னர் சின்னஉடையான் சேதுபதியாலும் அமைக்கப்பட்டன. 18-ஆம் நூற்றாண்டில் வெளிப்பிராகாரம் முத்துராமலிங்க சேதுபதியால் கட்டப்பட்டது.

பின்னர், தேவகோட்டை அள.அரு. குடும்பத்தினர் கிழக்குக் கோபுரத்தைக் கட்டினர். பின்னர், அக்குடும்பத்தினரே கருவறையைத் திருப்பணி செய்து, பிராகாரங்களைக் கற்களால் அமைத்து, 1947-இல் குடமுழுக்கு செய்வித்தனர்.

**தீர்த்தங்கள்:-**

இராமேச்சுரம் மூர்த்தி, தலம் பெருமைகள் நிறைந்ததோடு, தீர்த்தச்சிறப்பும் மிகுந்தது ஆகும்.

**அக்னிதீர்த்தம்:-**

இராமநாதர் கோயில் கீழச்சந்நிதிக்குக் கிழக்கில் உள்ள கடலாகும். இங்கே நீராடிப் பிதுர்கடன்களைச் செய்வது வழக்கம்.

கோயிலின் உள்ளே 22 தீர்த்தங்கள் உள்ளன.

1. மகாலெட்சுமி தீர்த்தம். கீழவாயில் அநுமான் கோயிலுக்குத் தென்புறம் உள்ளது.

2. காயத்திரி; 3. சாவித்திரி;4. சரஸ்வதி தீர்த்தங்கள். மூன்று தீர்த்தங்களும் கீழக்கோபுரத்திற்கு வடக்கில் உள்ள கிணறுகள் ஆகும்.

5. சேதுமாதவ தீர்த்தம். இது மேற்கு மூன்றாம் சுற்றில் சேதுமாதவர் கோயிலுக்குத் தென்புறம் அமைந்துள்ள கிணறு.

6. கந்தமாதன தீர்த்தம்; 7. கவாச்ச தீர்த்தம்; 8. கவப தீர்த்தம்; 9. நள தீர்த்தம்; 10. நீல தீர்த்தம். இத் தீர்த்தங்கள் மேற்கு மூன்றாம் பிராகாரத்தில் சேதுமாதவர் கோயிலைச் சுற்றியுள்ளன.

11. சங்குத்தீர்த்தம். இரண்டாம் சுற்றில் கருவூலத்திற்கு அருகில் உள்ளது.

12. சக்கரத் தீர்த்தம். கிழக்கு 2-ஆம் சுற்றில் உள்ளது.

13. பிரம்மகத்தி விமோசனத் தீர்த்தம்; 14. சூரிய தீர்த்தம்; 15. சந்திர தீர்த்தம்; 16. கங்கா தீர்த்தம்; 17. யமுனா தீர்த்தம்; 18. கயா தீர்த்தம். இவை வடக்கு உட்பிராகாரத்தில் உள்ளன.

19. சிவதீர்த்தம். சுவாமி அம்பாள் சந்நிதிகட்கு இடையே, பெரிய நந்திக்குத் தெற்கே உள்ளது.

20. சாந்தியாமிர்த தீர்த்தம். அம்பாள் சந்நிதியில் சுக்கரவார மண்டபத்திற்குத் தெற்கில் உள்ளது.

21. சர்வ தீர்த்தம். சுவாமி சந்நிதியில் முதல் சுற்றில் தென்கிழக்கில் உள்ளது.

22. கோடி தீர்த்தம். வடக்கு முதல் பிராகாரத்தில் விசாலாட்சியம்மை சந்நிதிக்கும், ஜோதிர் லிங்கச் சந்நிதிக்கும் இடையில் உள்ளது. இக்கோடி தீர்த்தம் எல்லாத் தீர்த்தங்களிலும் மிக உயர்ந்ததாகக் கருதப்படுகிறது. இதில்தான் கடைசியாக நீராடித் தீர்த்த நீராட்டை நிறைவுசெய்ய வேண்டும் என்பர்.

கோயிலுக்கு உள்ளே உள்ளன தவிரக் கோயிலுக்கு வெளியிலும் பல தீர்த்தங்கள் உள்ளன. அவற்றுள் மிகச் சிறந்ததாகக் கருதப்படுவது தனுஷ்கோடியில் கடல் சங்கமத்தில் உள்ள சேது தீர்த்தமாகும். பழங்காலத்தில் சேதுவில் நீராடிய் பின்னரே இராமேச்சுரம் வந்து நீராடி வழிபடுவது வழக்கமாக இருந்தது. மேலும் பல வெளியில் உள்ளன. அவற்றுள் சில.

1. சக்கரதீர்த்தம் (தர்ம புஷ்கரணி) - தேவிப்பட்டினத்தில் உள்ளது. 2. சக்கர தீர்த்தம் - திருப்புல்லாணி.3.. பாபவிநாச தீர்த்தம் - மண்டபம் இரயில் நிலையம் அருகில் உள்ளது.4. கபி தீர்த்தம் - பாம்பனில் உள்ளது. 5. மங்கல தீர்த்தம்; 6. இரண விமோசன தீர்த்தம் - தங்கச்சிமடத்தில் உள்ள ஏகாந்தராமர் கோயிலுக்கு அருகில் உள்ளன.7. அமிர்தவாவி தீர்த்தம் - ஏகாந்தராமர் கோயில் உள் உள்ளது. 8. சுக்கிரீவ; 9. ஜாம்பவ; 10. அங்கத; 11. பாண்டவ; 12. பீம; 13. அர்ச்சுன; 14. நகுல; 15. சகாதேவ தீர்த்தங்கள் - கந்தமான பர்வதம் அருகில் உள்ளன. 16. திரௌபதி தீர்த்தம்; 17. பிரம தீர்த்தம்; 18. பரசுராம தீர்த்தம் - பத்திரகாளியம்மன்கோயிலுக்கு அருகில் உள்ளன. 19. அநுமகுண்ட தீர்த்தம். இராமநாதர் கோயிலுக்கு வடக்கில் உள்ளது. 20. அகத்தியர் தீர்த்தம். கோயிலுக்கு வடகிழக்கில் உள்ளது. 21. ஜடாயு தீர்த்தம். இராமநாதர் கோயிலுக்குத் தெற்கில் உள்ளது. 22. வில்லூரணி தீர்த்தம். தங்கச்சிமடம்

அருகில் உள்ள ஏகாந்தராமர் கோயிலுக்கு அருகில் இரணவிமோசனத் தீர்த்தத்திற்கு வடக்கே கடற்கரையில் உள்ளது.

23. இலட்சுமண தீர்த்தம். இராமநாதர் கோயிலுக்கு மேற்கே 3/4 கிலோமீட்டர் தூரத்தில்உள்ள திருக்குளம். 24. இராமர் தீர்த்தம். இலட்சுமண தீர்த்தத்திற்குக் கிழக்கில் உள்ள திருக்குளம்.

மேலும் பல தீர்த்தங்கள் உள்ளனவாகக் கூறப்படுகின்றது.

## இராமேச்சுரத்தைச் சுற்றியுள்ள கோயில்கள்

### ஏகாந்த இராமர்கோயில்:-

தங்கச்சிமடம் இரயில் நிலையத்திலிருந்து கிழக்கே ஒன்றரை கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. இராமர் தம் கரத்தைச் சிறிது தூக்கிக்கொண்டு சீதையுடன் பேசுவதுபோல் உள்ளார். சீதை இலட்சுமணர் திருவுருவங்கள் அழகுடன் மிளிர்கின்றன.

### கந்தமாதன பர்வதம்:-

இராமநாதர் கோயிலுக்கு வடக்கில் 3 கி.மீ.தூரத்தில் உள்ள மணற்குன்று கந்தமாதன பர்வதம் என வழங்கப்படுகிறது. இக்குன்றில் இரண்டடுக்குக் கட்டிடம் ஒன்று உள்ளது. அதில் இராமருடைய பாதங்கள் உள்ளன. இங்கிருந்துதான் அநுமார் கடலைக் கடக்க முற்பட்டார் என வழங்கப்படுகிறது.

### நம்புநாயகியம்மன்கோயில்:-

இராமேச்சுரத்திற்குத் தெற்கே 3 கி.மீ. தூரத்தில் உள்ளது. நம்பியவர்க்கு ஏல்லாம் எல்லா நலன்களும் தந்து அருள்புரியும் கண்கண்ட தெய்வமாக இவ்வம்மை விளங்குவதால் நம்புநாயகி என வழங்குவதாகக் கூறுவர். இது ஒரு பிரார்த்தனைக் கோயிலாக விளங்குகின்றது.

## கோதண்டராமர் கோயில்:-

இராமேச்சுரத்திலிருந்து 8 கி.மீ.தூரத்தில் தனுஷ்கோடி செல்லும் வழியில் உள்ளது கோதண்டராமர் கோயில். வீடணன் இராமனிடம் சரணாகதி அடைந்த இடம் இதுவே என்பர். இந்த இடத்தில்தான் இலட்சுமணர் வீடணனுக்குப் பட்டாபிடேகம் செய்துவைத்தார் என்பர். இராமேச்சுரம் திருக்கோயில் இராமலிங்கப் பிரதிட்டை விழாவின்போது இராமர் உற்சவ மூர்த்தி வீடணன் பட்டாபிடேகத்திற்காக இங்கு எழுந்தருளச்செய்யப்பெறுகிறார். உஜ்ஜயினிமாகாளியம்மன்கோயில் இராமநாதசுவாமி சந்நதிக்கு எதிரில் அக்னிதீர்த்தக் கரையில் (கடல்) மேற்குநோக்கி அமைந்துள்ளது.

## திருக்கோயிலில் நாள்தோறும் நிகழும் பூஜை நேரங்கள்.

| | |
|---|---|
| 1. பள்ளியறை தீபாராதனை | - காலை 5.00 மணி. |
| 2. படிகலிங்க தீபாராதனை | - காலை 5.10 மணி. |
| 3. திருவனந்தல் தீபாராதனை | - காலை 6.00 மணி. |
| 4. விளா பூஜை | - காலை 7.00 மணி. |
| 5. காலசந்தி பூஜை | - காலை 10.00 மணி. |
| 6. உச்சிக்கால பூஜை | - நண்பகல் 12.00 மணி. |
| 7. சாயரட்சை பூஜை | - மாலை 6.00 மணி. |
| 8. அர்த்தசாம பூஜை | - இரவு 8.30 மணி. |
| 9. பள்ளியறை பூஜை | - இரவு 8.45 மணி. |

## இராமநாதர் திருக்கோயிலில் நிகழும் விழாக்கள்

| | | |
|---|---|---|
| 1. மகா சிவராத்திரி | - பிப்ரவரி, மார்ச் | - 10 நாட்கள். |
| 2. வசந்தவிழா | - மே, ஜுன் | - 10 நாட்கள். |
| 3. இராமலிங்கப் பிரதிட்டை விழா | - ஜுன், ஜுலை | - 10 நாட்கள். |
| 4. திருக்கல்யாணம் | - ஜுலை, ஆகஸ்ட் | - 17 நாட்கள். |
| 5. நவராத்திரி | - ஆகஸ்ட், செப்டம்பர் | - 10 நாட்கள். |
| 6. கந்தசஷ்டி | - செப்டம்பர், அக்டோபர் | - 6 நாட்கள். |
| 7. ஆருத்ரா தரிசனம் | - டிசம்பர், ஜனவரி | - 10 நாட்கள். |

இப்பெருவிழாக்கள் தவிர, மாத விழாக்களும் பட்ச விழாக்களும் நடைபெறும். மாதக்கார்த்திகை, பிரதோஷம் , வெள்ளிக்கிழமை ஆகிய நாட்களில் சிறப்பு வழிபாடுகள் உண்டு. வெள்ளிக்கிழமை இரவு பருவதவர்த்தினி அம்மை தங்கப்பல்லக்கில் 3-ஆம் பிராகாரம் வலம்வரும் காட்சி காணத்தக்கதாகும்.

பொங்கல் நாள், தமிழ் ஆண்டுப்பிறப்பு, மகாகார்த்திகை, தெப்போற்சவம், (தைப்பௌர்ணமி) ஆகிய நாட்களில் பஞ்சமூர்த்தி உற்சவம் நடைபெறும்.

**பள்ளியறை:-**

அம்பாள் கோயிலின் வடகிழக்கு மூலையில் பள்ளியறை உள்ளது. ஒவ்வொரு நாள் இரவும் இராமநாதர் சந்நிதியிலிருந்து இராமநாதர் தங்க விக்கிரகம் இங்கு எழுந்தருளச்செய்யப்பெற்று பள்ளியறை ஊஞ்சலில் அம்மையின் தங்கத்திருவுருவின் பக்கத்தில் வைக்கப்பெற்றுச் சயனபூஜை நிகழும்.

இரவு அர்த்தசாம பூஜையில் சேதுபதிமன்னர் கலந்து-கொண்டு இறைவன் பள்ளியறை செல்லும்போது தீவட்டிஏந்திச்-செல்வாராம். பின்னர் பைரவபூஜை வரை சென்று அங்கு அளிக்கப்பெறும் பிரசாதமாகிய சாதம் துவையல் குழம்பு பெற்றுச் செல்வாராம்.

விடியற்காலையில் அதேபோன்று பள்ளியெழுச்சி பூஜை செய்து இராமநாதரை மூலத்தானத்திற்கு எழுந்தருளச்செய்வர். இவ்விரு பூசைகளும் காணத்தக்கன.

**இராமேச்சுரம் பற்றிய செய்திகள் உள்ள நூல்கள்:-**

**வடமொழி:-**

1.ரிக்வேதம், 2. கிருஷ்ணயஜுர்வேதம் (தைத்ரீய சம்ஹிதை); 3. வால்மீகி இராமாயணம்; 4. அத்யாத்ம இராமாயணம்; 5. ஆனந்த இராமாயணம்; 6. ஆக்னேய புராணம்; 7. பாகவத புராணம்; 8. பத்ம புராணம்; 9. சிவ புராணம்;

10. கூர்ம புராணம்; 11. ஸ்காந்த புராணம்; 12. மார்க்கண்டேய புராணம்; 13. பிர்மாண்டபுராணம்; 14. மத்ச்யபுராணம்; 15. மனு ஸ்மிருதி; 16. கால ஸ்மிருதி; 17. கௌதம ஸ்ருதி; 18. தேவ ஸ்மிருதி; 19. மரீசி ஸ்மிருதி; 20. பராசர ஸ்மிருதி; 21. தயாசதகம் (வேதாந்த தேசிகர்); 22. விசுவகுணதர்சம்; 23. துளசிதாசர் இராமாயணம்.

**தமிழ்மொழியில் இராமேச்சுரம் பற்றிய குறிப்புகள் உள்ள நூல்கள்:-**

1. திருஞானசம்பந்தர் தேவாரம், 2. திருநாவுக்கரசர் தேவாரம்; 3. பெரியபுராணம், 4. திருப்புகழ்; 5. தாயுமானவர் பாடல்; 6. அருணாசலக்கவிராயர் பாடல்கள், 7. திருவிளையாடற் புராணம்; 8. தேவையுலா (சொக்கநாதப்புலவர்); 9. சேதுபுராணம் (நிரம்ப அழகிய தேசிகர்).

## இராமேச்சுரம் - தேவாரப் பாடல்கள்

### திருஞானசம்பந்தர் பாடல்கள்

பண்-காந்தாரபஞ்சமம்) (3-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

அலைவளர் தண்மதி யோடய லேயடக் கியுமை
முலைவளர் பாகமு யங்கவல் லமுதல் வன்முனி
இலைவளர் தாழைகள் விம்முகா னல்இரா மேச்சுரம்
தலைவளர் கோலநன் மாலையன் தானிருந் தாட்சியே. 1

தேவியை வவ்விய தென்னிலங் கைத்தச மாமுகன்
பூவிய லும்முடி பொன்றுவித் தபழி போயற
ஏவிய லுஞ்சிலை யண்ணல்செய் தஇரா மேச்சுரம்
மேவிய சிந்தையி னார்கள்தம் மேல்வினை வீடுமே. 2

மானன நோக்கியை தேவிதன் னையொரு மாயையால்
கானதில் வவ்விய காரரக் கன்னுயிர் செற்றவன்
ஈனமி லாப்புக ழண்ணல்செய் தஇரா மேச்சுரம்
ஞானமும் நன்பொரு ளாகிநின் றதொரு நன்மையே. 3

உரையுண ராதவன் காமமென் னும்முறு வேட்கையான்
வரைபொரு தோளிறச் செற்றவில் லிமகிழ்ந் தேத்திய
விரைமரு வுங்கட லோதமல் கும்இரா மேச்சுரத்
தரையர வாடநின் றாடல்பே ணும்அம்மான் அல்லனே. 4

ஊறுடை வெண்டலை கையிலேந் திப்பல வூர்தொறும்
வீறுடை மங்கையர் ஐயம்பெய் யவிற லார்ந்ததோர்
ஏறுடை வெல்கொடி யெந்தைமே யஇரா மேச்சுரம்
பேறுடை யான்பெய ரேத்துமாந் தார்பிணி பேருமே. 5

அணையலை சூழ்கடல் அன்றடைத் துவழி செய்தவன்
பணையிலங் கும்முடி பத்திறுத் தபழி போக்கிய
இணையிலி யென்றுமி ருந்தகோ யில்இரா மேச்சுரம்
துணையிலி தூமலர்ப் பாதமேத் தத்துயர் நீங்குமே. 6

சனிபுதன்ஞாயிறு வெள்ளிதிங் கட்பல தீயன
முனிவது[1] செய்துகந் தானைவென் றவ்வினை மூடிட
இனியருள் நல்கிடென் றண்ணல்செய் தஇரா மேச்சுரம்
பனிமதி சூடிநின் றாடவல் லபர மேட்டியே. 7

பெருவரை யன்றெடுத் தேந்தினான் தன்பெயர் சாய்கெட
அருவரை யாலடர்த் தன்றுநல் கியயன் மாலெனும்
இருவரும் நாடிநின் றேத்துகோ யில்இரா மேச்சுரத்
தொருவனு மேபல வாகிநின் றதொரு வண்ணமே. 8-9

சாக்கியர் வன்சமண் கையர்மெய் யில்தடு மாற்றத்தார்
வாக்கிய லும்முரை பற்றுவிட் டுமதி யொண்மையால்
ஏக்கிய லுஞ்சிலை யண்ணல்செய் தஇரா மேச்சுரம்
ஆக்கிய செல்வனை யேத்திவாழ் மின்னரு ளாகவே. 10

பகலவன் மீதியங் காமைக்காத் தபதி யோன்றனை
இகலழி வித்தவன் ஏத்துகோ யில்இரா மேச்சுரம்
புகலியுள் ஞானசம் பந்தன்சொன் னதமிழ் புந்தியால்
அகலிட மெங்குநின் றேத்தவல் லார்க்கில்லை அல்லலே. 11

திருச்சிற்றம்பலம்.

இப்பதிகத்தில் 9-ஆம் செய்யுள் மறைந்துபோயிற்று.
பாடம்: 1. முனிவன.

பண்-பழம்பஞ்சுரம்) (3-ஆம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

திரிதரு மாமணி நாகமாடத் திளைத்தொரு தீயழல்வாய்
நரிகதிக்க எரியேந்தி யாடும் நலமே தெரிந்துணர்வார்
எரிகதிர் முத்தம் இலங்குகானல் இராமேச் சுரமேய
விரிகதிர் வெண்பிறை மல்குசென்னி விமலர் செயுஞ்செயலே. 1

பொறிகிளர் பாம்பரை யார்த்தயலே புரிவோ டுமைபாடத்
தெறிகிள ரப்பெயர்ந் தெல்லியாடுந் திறமே தெரிந்துணர்வார்
எறிகிளர் வெண்டிரை வந்துபேரும் இராமேச் சுரமேய
மறிகிளர் மான்மழுப் புல்குகையெம் மணாளர் செயுஞ்செயலே. 2

அலைவளர் தண்புனல் வார்சடைமேல் அடக்கி யொருபாகம்
மலைவளர் காதலி பாடஆடி மயக்கா வருமாட்சி
இலைவளர் தாழை முகிழ்விரியும் இராமேச் சுரமேயார்
தலைவளர் கோலநன் மாலைசூடுந் தலைவர் செயுஞ்செயலே. 3

மாதன[1] நேரிழை யேர்தடங்கண் மலையான் மகள்பாடத்
தேதெரி அங்கையில் ஏந்தியாடுந் திறமே தெரிந்துணர்வார்
ஏதமிலார் தொழுதேத்தி வாழ்த்தும் இராமேச் சுரமேயார்
போதுவெண் டிங்கள்பைங் கொன்றைசூடும் புனிதர் செயுஞ்செயலே. 4

சூலமோ டொண்மழு நின்றிலங்கச் சுடுகா டிடமாகக்
கோலநன் மாதுடன் பாடஆடுங் குணமே குறித்துணர்வார்
ஏலந றும்பொழில் வண்டுபாடும் இராமேச் சுரமேய
நீலமார் கண்ட முடையவெங்கள் நிமலர் செயுஞ்செயலே. 5

கணைபிணை வெஞ்சிலை கையிலேந்திக் காமனைக் காய்ந்தவர்தாம்
இணைபிணை நோக்கிநல் லாளொடாடும் இயல்பின ராகிநல்ல
இணைமலர் மேலன்னம் வைகுகானல் இராமேச் சுரமேயார்
அணைபிணை புல்கு கரந்தைசூடும அடிகள் செயுஞ்செயலே. 6

நீரினார் புன்சடை பின்புதாழ நெடுவெண் மதிசூடி
ஊரினார் துஞ்சிருள் பாடியாடும் உவகை தெரிந்துணர்வார்
ஏரினார் பைம்பொழில் வண்டுபாடும் இராமேச் சுரமேய
காரினார் கொன்றைவெண் டிங்கள்சூடுங் கடவுள் செயுஞ்செயலே. 7

பொன்திகழ்[2] சுண்ணவெண் ணீறுபூசிப் புலித்தோ லுடையாக
மின்திகழ் சோதியர் பாடலாடல் மிக்கார் வருமாட்சி
என்றுநல் லோர்கள் பரவியேத்தும் இராமேச் சுரமேயார்
குன்றினாலன்றரக் கன்தடந்தோள்அடர்த்தார்கொளுங் கொள்கையே. 8

கோவலன் நான்முகன் நோக்கொணாத குழகன் அழகாய
மேவலன் ஒள்ளெரி யேந்தியாடும் இமையோர் இறை மெய்ம்மை
ஏவல னார்புகழ்ந் தேத்திவாழ்த்தும் இராமேச் சுரமேய
சேவல வெல்கொடி யேந்துகொள்கை யெம்மிறைவர் செயுஞ்செயலே. 9

பின்னொடு முன்னிடு தட்டைச்சாத்திப் பிரட்டே திரிவாரும்
பொன்னெடுஞ் சீவரப் போர்வையார்கள் புறங்கூறல் கேளாதே
இன்னெடுஞ் சோலைவண் டியாழ்முரலும் இராமேச் சுரமேய
பன்னெடு வெண்டலை கொண்டுழலும் பரமர் செயுஞ்செயலே. 10

தேவியை வவ்விய தென்னிலங்கை யரையன் திறல்வாட்டி
ஏவியல் வெஞ்சிலை யண்ணல்நண்ணும் இராமேச் சுரத்தாரை
நாவியன் ஞானசம் பந்தன்நல்ல மொழியால் நவின்றேத்தும்
பாவியன் மாலைவல் லாரவர்தம் வினையாயின பற்றறுமே. 11

திருச்சிற்றம்பலம்.

சுவாமி-இராமநாதர்; தேவி-மலைவளர்காதலி (பருவதவர்த்தினி)

பாடம்: 1. மாதென, 2. பொன்றினார்.

## திருநாவுக்கரசர் தேவாரம்

திருநேரிசை (4-ஆம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்

பாசமுங் கழிக்க கில்லா அரக்கரைப் படுத்துத் தக்க
வாசமிக் கலர்கள் கொண்டு மதியினால் மால்செய் கோயில்
நேசமிக் கன்பி னாலே நினைமின்நீர் நின்று நாளுந்
தேசமிக் கான்இ ருந்த திருஇரா மேச்சு ரமே. 1

முற்றின நாள்கள் என்று முடிப்பதே கார ணமாய்
உற்றவன் போர்க ளாலே உணர்விலா அரக்கர் தம்மைச்
செற்றமால் செய்த கோயில் திருஇரா மேச்சு ரத்தைப்
பற்றிநீ பரவு நெஞ்சே படர்சடை ஈசன் பாலே. 2

கடலிடை மலைகள் தம்மால் அடைத்துமால் கருமம் முற்றித்
திடலிடைச் செய்த கோயில் திருஇரா மேச்சு ரத்தைத்
தொடலிடை வைத்து நாவிற் சுழல்கின்றேன் தூய்மையின்றி
உடலிடை நின்றும் பேரா ஐவர்ஆட் டுண்டு நானே. 3

குன்றுபோல் தோளு டைய குணமிலா அரக்கர் தம்மைக்
கொன்றுபோ ராழி யம்மால் வேட்கையாற் செய்த கோயில்
நன்றுபோல் நெஞ்ச மேநீ நன்மையை அறிதி யாயில்
சென்றுநீ தொழுதுய் கண்டாய் திருஇரா மேச்சு ரமே. 4

வீரமிக் கெயிறு காட்டி விண்ணுற நீண்ட ரக்கன்
கூரமிக் கவனைச் சென்று கொன்றுடன் கடற்ப டுத்துத்
தீரமிக் கானிருந்த திருஇரா மேச்சு ரத்தைக்
கோரமிக் கார்த வத்தாற் கூடுவார் குறிப்பு ளாரே. 5

ஆர்வலம் நம்மின் மிக்கார் என்றஅவ் வரக்கர் கூடிப்
போர்வலஞ் செய்து மிக்குப் பொருதவர் தம்மை வீட்டித்
தேர்வலஞ் செற்ற மால்செய் திருஇரா மேச்சு ரத்தைச்
சேர்மட நெஞ்ச மேநீ செஞ்சடை எந்தை பாலே. 6

வாக்கினால் இன்பு ரைத்து வாழ்கிலார் தம்மை யெல்லாம்
போக்கினாற் புடைத்த வர்கள் உயிர்தனை யுண்டு மால்தான்
தேக்குநீர் செய்த கோயில் திருஇரா மேச்சு ரத்தை
நோக்கினால் வணங்கு வார்க்கு நோய்வினை நுணுகு மன்றே. 7

பலவுநாள் தீமை செய்து பார்தன்மேற் குழுமி வந்து
கொலைவிலார் கொடிய ராய அரக்கரைக் கொன்று வீழ்த்த
சிலையினான் செய்த கோயில் திருஇரா மேச்சு ரத்தைத்
தலையினால் வணங்கு வார்கள் தாழ்வராந் தவம தாமே. 8

கோடிமா தவங்கள் செய்து குன்றினார் தம்மை யெல்லாம்
வீட்வே சக்க ரத்தால் எறிந்துபின் அன்பு கொண்டு
தேடிமால் செய்த கோயில் திருஇரா மேச்சு ரத்தை
நாடிவாழ் நெஞ்ச மேநீ நன்னெறி யாகு மன்றே. 9

வன்கண்ணர் வாள ரக்கர் வாழ்வினை யொன்ற றியார்
புன்கண்ண ராகிநின்று போர்கள்செய் தாரை மாட்டிச்
செங்கண்மால் செய்த கோயில் திருஇரா மேச்சு ரத்தைத்
தங்கணால் எய்த வல்லார் தாழ்வராந் தலைவன் பாலே. 10

வரைகளொத் தேயு யர்ந்த மணிமுடி அரக்கர் கோனை
விரையமுற்(று) அறவொ டுக்கி மீண்டுமால் செய்த கோயில்
திரைகள்முத் தால்வ ணங்குந் திருஇரா மேச்சு ரத்தை
உரைகள்பத் தாலு ரைப்பார் உள்குவார் அன்பினாலே. 11

திருச்சிற்றம்பலம்.

சுவாமி-இராமநாதர்; தேவி-மலைவளர்காதலி (பர்வதவர்த்தினி).

## பிற திருமுறைகள்

**இராமேச்சுரம் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ள திருமுறைப் பாடல்கள் சில**

புகழும் பெருமை யாய் நீயே என்றும்
பூங்கயிலை மேவினாய் நீயே என்றும்
இகழும் தலைஏந்தி நீயே என்றும்
இராமேச்சுரத்து இன்பன் நீயே என்றும்
ஆலவாய் மேவினாய் நீயே என்றும்
திகழும் மதிசூடி நீயே என்றும்
நின்ற நெய்த்தானா என் நெஞ்சுளாயே.

இடைமருது ஈங்கோய் இராமேச்சுரம்
இன்னம்பர் ஏர்இடவை ஏமப்பேறூர்
சடைமுடி சாலைக்குடி தக்களூர்
தலையாலங்காடு தலைச்சங்காடு
கொடுமுடி குற்றாலம் கொள்ளம்பூதூர்
கோத்திட்டை கோட்டாறு கோட்டுக்காடு
கடைமுடி கானூர் கடம்பந்துறை
கயிலாய நாதனையே காணலாமே.

நாடகம் ஆடிடம் நந்திகேச்சுரம் மாகாளேச்சுரம்
நாகேச்சுரம் நாகளேச்சுரம் நன்கான
கோடீச் சுரம் கொண்டீச்சுரம் திண்டீச்சுரம்
குக்குடேச்சுர மக்கீச்சுரம் கூறுங்கால்
ஆட்கேச்சுரம் அகத்தீச்சுரம் அயனீச்சுர
மத்தீச்சுரம் சித்தீச்சுரம் அந்தண் கானல்
ஈடுதிரை **இராமேச்சுரம்** என்று என்று ஏத்தி
இறைவன் உறைசுரம் பலவும் இயம்புவோமே.

-நாவரசர்.

ஈழநாட்டு மாதோட்டம் தென்னாட்டு இராமேச்சுரம்
சோழநாட்டுத் துருத்தி நெய்த்தானம் திருமலை
ஆழியூரன நாட்டுக் கெல்லாம் அணியாகிய
கீழையில் அரனார்க்கு இடம் கிள்ளிகுடியதே.

-சுந்தரர்.

## பெரியபுராணம்

புண்ணியனார் நெல்வேலி பணிந்து போற்றிப்
புரிசடையார் திருப்பதிகள் பிறவும் சென்று
நண்ணி இனித்மர்ந்தங்கு நயந்து பாடி
நற்றொண்டருடன் நாளும் போற்றிச் செல்வார்
விண்ணவரைச் செற்றுகந்தான் இலங்கை செற்ற
மிக்க பெரும் பாதகத்தை நீக்க வேண்டித்
திண்ணிய பொன் சிலைத் தடக்கை இராமன் செய்த
திருஇரா மேச்சுரத்தைச் சென்று சேர்ந்தார்.

செங்கண்மால் வழிபட்ட கோயில் நண்ணித்
திருமுன்பு தாழ்ந்தெழுந்து தென்னனோடும்
மங்கையர்க்கு நாயகியார் தாமும் மெய்ம்மை
மந்திரியாரும் சூழ மணி நீள் வாயில்
பொங்கி எழும் விருப்பினால் உடனே புக்குப்
புடைவலம் கொண்டுஉள்அணைவார் போற்றிசெய்து
பங்கயச் செங்கை குவித்துப் பணிந்து நின்று
பாடினார் மன்னவனும் பரவி ஏத்த.

சேதுவின்கண் செங்கண்மால் பூசை செய்த
சிவபெருமான்தனைப் பாடிப் பணிந்து போந்து
காதலுடன் அந்நகரில் இனிது மேவிக்
கண்ணுதலான் திருத்தொண்டரானார்க்கு எல்லாம்
கோதில் புகழ்ப் பாண்டி மாதேவியார் மெய்க்
குலச்சிறையார் குறைவறுத்துப் போற்றிச் செல்ல
நாதர்தமை நாடோறும் வணங்கி ஏத்தி
நளிர் வேலைக் கரையில் நயந்து இருந்தாரன்றே.
- சம்பந்தர் புராணம்.

தேவர் தொழும் தனிமுதலைத் திரு இராமேச்சுரத்து
மேவிய சங்கரனை எதிர்நின்று விருப்புறு மொழியால்
பாவு திருநேரிசைகள் முதலான தமிழ்பாடி
நாவரசர் திருத்தொண்டு நலம் பெருகச் செய்தமர்ந்தார்.
-அப்பர் புராணம்.

## பஞ்சபுராணம்

### திருச்சிற்றம்பலம்

வன்கண்ணர் வாளரக்கர் வாழ்வினை ஒன்றறியார்
புன்கண்ணராகி நின்று போர்கள் செய்தாரை மாட்டிச்
செங்கண்மால் செய்த கோயில் திருஇராமேச் சுரத்தைத்
தங்கணால் எய்தவல்லார் தாழ்வராம் தலைவன் பாலே.
- தேவாரம்.

கடையவனேனைக் கருணையினால் கலந்து ஆண்டுகொண்ட
விடையவனே விட்டிடுதி கண்டாய் விறல் வேங்கையின் தோல்
உடையவனே மன்னும் உத்தரகோச மங்கைக்கு அரசே
சடையவனே தளர்ந்தேன் எம்பிரான் என்னைத் தாங்கிக்கொள்ளே.
-திருவாசகம்.

ஒண்மையனே திருநீற்றை உத்தூளித்து ஒளி மிளிரும்
வெண்மையனே விட்டிடுதிகண்டாய் மெய் யடியவர்கட்கு
அண்மையனே என்றும்சேயாய் பிறர்க்கு அறிதற்குஅரிதாம்
பெண்மையனே தொன்மை ஆண்மையனே அலிப்பெற்றியனே.
- திருவாசகம்.

செம்பொனே பவளக் குன்றமே நின்ற திசைமுகன் மாமுதல் கூட்டத்து
அன்பரானவர்கள் பருகும் ஆரமுதே அத்தனே பித்தனேனுடைய
சம்புவே அணுவே தாணுவே சிவனே சங்கரா சாட்டியக் குடியார்க்கு
இன்பனே எங்கும் ஒழிவற நிறைந்தேழ் இருக்கையில் இருந்தவாறு
இயம்பே.

- திருவிசைப்பா.

சேலும் கயலும் திளைக்கும் கண்ணார் இளம்
கொங்கையில் செங்குங்குமம்
போலும் பொடி அணி மார்பிலங்கும் மென்று
புண்ணியர் போற்றிசைப்ப
மாலும் அயனும் அறியா நெறிதந்து
வந்தென் மனத்தகத்தே
பாலும் அமுதமும் ஒத்து நின்றானுக்கே
பல்லாண்டு கூறுதுமே. - திருப்பல்லாண்டு.

தென்இலங்கை இராவணன்தன் சிரம் ஈரைந்தும் துணித்த
மன்னவனாம் இராமனுக்கு வரும் பெரும் பாதகம் தீர்த்த
பிஞ்ஞகரைத் தொழுவதற்கு நினைந்து போய்ப் பெருமகிழ்ச்சி
துன்னி மனம் கரைந்துருகத் தொழுதெழுந்தார் சொல்லரசர்.

-பெரியபுராணம்.

## சேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ்

சச்சிதானந்த அனந்தகல்யாண குண
சருவக்கிய சூடாமணி
சருவ பரிபூரண பரப்பிரமமே பெரிய
தற்பெரும் சோதிவடிவே
அச்சம் ஒன்று இல்லா வசஞ்சலவ மோகமே
அகண்ட பரஞான ஒளியே
அறிவினுக்கு அறிவே அனாதி யகளங்கமே
அமுதமதி கோடி ஒளியே
நிச்சய மகோதய அனந்த ரவி சோதியே
நிர்க்குண நிராதாரமே
நிராமய புராதன நிரஞ்சன சுகாதீத
ஞேயமாம் அத்துவிதமே

செச்சை மலர் மாலையணி பன்னிரு புயாசலா
செங்கீரை ஆடி யருளே
சேது ராமேச்சுரம் குடிகொண்ட முருகனே
செங்கீரைஆடி யருளே.
- சிதம்பரநாத முனிவர்.

## காலம்தோறும் சிவனை வழிபடலின் பலன்

காலை தொழ அற்றை வினை கட்டகலும்; கட்டுச்சி
வேலைதொழ இப்பிறப்பில் வெந்துயர்போம் - மாலையினில்
வந்து சிவன்தாளை வந்தித்தால் ஏழ்பிறப்பின்
வெந்துயரம் எல்லாம் விடும்.

## வழிபாட்டுப் பாடல்கள்

### தாயுமானவர் பாடிய திருப்பாடல்

பதிஉண்டு நிதிஉண்டு புத்திரர்கள் மித்திரர்கள்
பக்கம்உண்டு எக்காலமும்
பவிசுஉண்டு தவிசுஉண்டு திட்டாந்தமாக யம
படர்எனும் திமிரசு மணுகாக்
கதிஉண்டு ஞானமாம் கதிர்உண்டு சதிர்உண்டு
காயசித்திகளும் உண்டு
கறையுண்ட கண்டர்பால் அம்மைநின் தாளில்
கருத்து ஒன்றும் உண்டாகுமேல்

நதிஉண்ட கடல்எனச் சமயத்தை உண்டபர
ஞான ஆனந்த வெளியே
நாதாந்த ரூபமே வேதாந்த மோனமே
நான்எனும் அகந்தை தீர்த்துஎன்
மதியுண்ட மதியான மதிவதன வல்லியே
மதுசூதனன் தங்கையே
வனராஜனுக்கு இரு கண்மணியாய் உதித்தமலை
வளர்காதலிப் பெண் உமையே.

பூரணி புராதனி சுமங்கலை சுதந்தரி
புராந்தகி திரியம்பகி எழில்
புங்கவி விளங்கு சிவசங்கரி கஹஸ்ரதள
புஷ்பமிசை வீற்றிருக்கும்
நாரணி மனாதீத நாயகி குணாதீத
நாதாந்த சத்தி என்றுஉன்
நாமமே உச்சரித்திடும் அடியர் நாமமே
நான் உச்சரிக்க வசமோ
ஆரணிசடைக் கடவுளாரணி எனப்புகழ
அகிலாண்ட கோடி ஈன்ற
அன்னையே பின்னையும் கன்னிஎன மறைபேசும்
ஆனந்த ரூப மயிலே.
வார்அணியும் இரு கொங்கை மாதர் மகிழ் கங்கைபுகழ்
வளமருவு தேவை அரசே
வனராஜனுக்கு இருகண்மணியாய் உதித்தமலை
வளர் காதலிப் பெண் உமையே.
-பர்வதவர்த்தினி அம்மைப் பதிகம்.

## திருப்புகழ்

வானோர் வழுத்தும் உனது பாதார பத்மமலர்
மீதே பணிக்கும் வகை அறியாதே
மானார் வலைக்கண் அதிலே தூளி மெத்தையினில்
ஊடே யணைத்துதவும் அதனாலே
தேனோ கருப்பில்எழு பாகோ இதற்குஇணைகள்
ஏதோ எனக் கலவி பலகோடி
தீரா மயக்கினொடு நாகா படத்தில்எழு
சேறாடல் பெற்ற துயர் ஒழியேனோ
மேனாடு பெற்றுவளர் சூராதிபற்கு எதிரின்
ஊடேகி நிற்கும் இரு கழலோனே
மேகாரஉக்ர பரி தானேறி வெற்றிபுனை
வீரா குறச்சிறுமி மணவாளா
ஞானபரற்கு இனிய வேதாகமப்பொருளை
நாணாது உரைக்கும் ஒரு பெரியோனே
நாராயணற்கு மருகா வீறுபெற்று இலகு
ராமேசுரத்தில் உறை பெருமாளே.
- அருணகிரிநாதர்.

## சேதுபுராணம்

(நிரம்ப அழகிய தேசிகர்)

பூமலி இதழி சூடும் புதுநிலா மகுடவேணி
நாமலி சுருதி போற்றும் நம்பிரான் இராமநாத
னேமலிசிலை இராமற்கு இராவணப் பிரம்மகத்தித்
தீமலி இடுக்கண் தீர்த்த சேவடி சென்னி வைப்பாம்.

உலகில்உயர்ந்தாய் பெருமாயை உடையாய் இலைமூன்று உடைக்கழுமுள்
இலகுபடையாய் இணைமலர்த்தாள் இறைஞ்சும் அடியார் இளைப்பு அனைத்தும்
விலகும்பரனே எப்பொருளும் வீட்டு முதலே விண்உறையும்
அலகில் தேவர்தம் தேவே அருமாமறையின் சிரத்தறிவே.

பேராருயிரே இறும்பூது பிறங்கும் வீரப் பெற்றியினாய்
கோராமக பாதகம் தீர்க்கும் துணைவா அவிச்சை துடைப்பானே
காரார் கால காலனே காலம் ஆனாய் அது கடந்தாய்
சாரார் போக்கு வரவு இரண்டால் தவிக்கும் தாபம் தணிப்பானே.

உணங்கும் பினாக பாணியினாய் மதனை எரித்தாய் மாதவத்தோர்
கணம் கொள் இமையோர் கழல் தொழற்கு ஆம்காலம் கருதிக் கடைத்தலைவாய்
உணங்கு கயிலைத் திருக்கோயில் உடையாய் நம என்று உளத்து அன்பால்
இணங்கு இராமன் எடுத்து ஏத்தி இராமநாதன் தாள் பணிந்தான்.

ஆதியே போற்றி ஆராஅமுதே போற்றி மங்கை
பாதியே போற்றி இன்பப் பரவையே போற்றிமேலாம்
சோதியே போற்றி தெய்வச் சுருதியும் தொடரொணாத
நீதியே போற்றி கற்றோர் நிதியமே போற்றிபோற்றி.

பாழிவாய் மணிகொள் பாந்தள் பாயல் நீத்து அயோத்திவந்த
வாழிமால் இராமன்தன் பாலாழி நீர் அகழிலங்கை
வாழிராவண அரக்கன் வலிகெழு பிரமகத்திக்
காழிராது அகற்றி ஆண்ட கருணை மாகடலே போற்றி.



நேசனே போற்றி போற்றி நிமலனே போற்றி சேது
வாசனே போற்றி போற்றி வள்ளலே போற்றி போற்றி
தேசனே போற்றி போற்றி சீதைகோன் பூசித்து ஏத்
ஈசனே போற்றி போற்றி இராமநாயகனே போற்றி.

நாவினால் இராமநாதன் நல்லருள் வழுத்த நாளும்
பூவினால் பூசை செய்யப் புகழ்ந்திடச் சேதுவின்கண்
சாவுறக் கிடையாது யார்க்கும் தாணுவே நீயே தாணு
ஆவது என்று உணர்வார் வென்றி அடைகுவர் இங்கும் அங்கும்.

எற்பட எழுந்து முக்கால் இராமநாதா என்றக்கால்
முற்பகல் பவங்கள் தீருமொழியும் அவ் விலிங்கமூர்த்தி
அற்பினர்க்கு அருள வேண்டும் ஆதரம் மேவி என்றும்
விற்பயில் கதிராம் காணும் விழியினர் துயர்ப்பனிக்கே.

தன்னிகர் இராமநாதா சதாசிவா நீலகண்டா
பன்னு மாதேவா என்பார் பண்ணிய பாவம்பாறும்
மின்னுவேல் காலகாலா வேலைவாய் விடம் அயின்றாய்
இன்னருள் இராமநாதா என்பவர் சினம் கொண்டு எஞ்சார்.

வேதநூல் சாத்திரங்கள் வேள்விகள் எல்லாம் ராம
நாதனே பிறிதொன்றில்லை நம்பனை அவனைத் தானே
ஆதர்வதனால் போற்றி அடிதொழல் வேண்டும் அன்னோன்
தாதுஅவிழ் சரோருகப் பூஞ்சரணமே சரணம் ஆனோர்.

## இராமலிங்காஷ்டகம்

(நடேசக் கவுண்டர்)

பால சந்த்ரசூட! பொங்கு கங்கை தங்கு செஞ்சடா
பாரவீர! வேரி துன்று கொன்றை தும்பை மாலையாய்
சீலராம சந்த்ரன் அன்புகொண்டு முன்பு பூசை செய்
சேதுமீதிலங்கு தேவதேவ! ராமலிங்கமே.

காலகால; சூலபாணி காமகோப; சாபவே
தண்டசாம கண்ட நீரையுண்ட மேக மேனியான்
சேலினேர் கணாள் வைதேகி யோடு இராமனார் தொழும்
சேதுமீது இலங்கு தேவதேவ! **ராமலிங்கமே.**

ஆதிவேதம் ஆதி ஏழிரண்டு விஞ்சை தேறினார்
ஐந்தடங்கி ஆறுமாறும் அந்தணாளர் சிந்தையாய்
சீதை மாதின் ஆவியாய ராமனார் தொழும்பதா
சேதுமீதிலங்கு தேவதேவ! **ராமலிங்கமே.**

வஞ்சம் மிஞ்சும் ஐம்புலன் மயங்கும்
நெஞ்சு வாய்ந்த நான் வம்பிலே உழன்று துன்பு
மருவுறாமல் அருள் செயாய்
செஞ்சொலார் புகழ்ந்து பாடுசீர் இராமனார் தொழும்
சேதுமீதிலங்கு தேவதேவ! **ராமலிங்கமே.**

பழுதிலாத செஞ்சொல் மாலை அழுது சாத்து பத்தர்தம்
பத்தி, ஞானபுத்தி, மற்ற நல்ல உள்ளம் நல்கியே
செழுமையான வாழ்வு மேவ அருள்க! சீதை காதலான்
சேதுமீதிலங்கு தேவதேவ! **ராமலிங்கமே.**

## கம்ப இராமாயணம்

இந்த மாநகர் தன்னிலே இறைவனை அருச்சித்து
உந்தன் மாநகர் எய்தினால் சாய்கை போம் உரவோய்
அந்த நீதியே செய்தும் என்று அநுமனை அழைத்திட்டு
எந்தன் நாதனை இமைப்பினில் கொடுவா என்றான்.

போதி என்று அவன் போக்கிய இராமனும் இந்த
மாது சீதையும் மைந்தனாம் இலக்குவன் தானும்
தீதுதீரவே தீர்த்தங்கள் யாவையும் ஆடி
ஆதிநாதனும் இருந்தனன் அமரர்கள் வியப்ப.

காலம் சென்றது எனக்கருதிக் கையால்
கோலமான மணலினைக் கூட்டியே
ஆலம் உண்ட தேவு இவராம் என
ஞாலம் உண்டவர் தம்மனம் நாட்டவே.

முகுத்தம் ஆனது என முனிவனும் மொழிதலும் இராமன்
மிகுத்ததோர் இடத்து எய்தியே வெண்மணல் கூப்பி
அகத்தினில் புறம் பூசித்தே அடிமலர் இறைஞ்சிச்
செகுத்த தோளுடைத் தம்பியும் சீதையும் தானும்.

ஒத்த பூசனை செய்யவும் அமைதியின் உள்ள
சுத்தி மேவிய ஞானமும் தொடர்விடா திருந்தோன்
அத்தன் பாதகமானவை அழிதர வியற்றிச்
சித்தம் வாழ்தர நின்றனன் தேவர்கள் துதிப்ப.

நின்ற போதினில் நிறங்களும் படலமும் கொண்டு
வென்றிசேர் புயமாருதி விரைவினில் வந்து
நன்று செய்தனை எனப்போய் நாதனைப் பிடுங்கி
வென்றி வால்அற்று மேதினி வீழ்ந்தனன் வீரன்.

விழுந்தவன்தனை வெந்திறல் இராகவன் நோக்கி
அழுந்து சிந்தையாய் அறிவிலாது அதனை என்செய்தாய்
பொழிந்து மாமலரிட்டு நீ அருச்சி என்று உரைப்ப
எழுந்துபோய் அவன் இறைவனை அருச்சனை செய்தான்.

- கம்பர்.

## அருணாசலக் கவிராயர்

அருவில்ஒரு நான்குமாய் உருவில் ஒருநான்கும்ாய் அமைந்ததன்றி
உருஅருவில் ஒன்று என்னும் சதாசிவமாம் இலிங்க உருஉற்றுப் பின்னர்த்
திருஇராமேசர் எனச்சிறப்புப் பேர்ஒன்று எய்திச் சேதுதன்னில்
பருவத வர்த்தினி மணந்த நாயகனாம் பரம்பரனைப் பணிதல் செய்வாம்.

பொன்பூத்த செழுங் கொன்றை மாலையோடு வெள்ளெருக்கம் பூவும்தாங்கு
மின்பூத்த சடைமுடிஎம் பெருமான் நம் மூவர்தமிழ் மெய்ப்பாவோடு
தென்பூத்த சேது ராமேச்சுரத்தில் பிற அடியார் செப்பும் பாவும்
தன்பூத்த கருணையினால் ஏற்றருளும் என நினைந்து அஞ்சலி
செய்வோமே

## பர்வதவர்த்தினி பிள்ளைத்தமிழ்

வரும் பேரின்பத் துறை கொழிக்கும் மணியே வருக! சிவானந்த
வடிவே வருக! உயிர் மலநோய் மாற்றும் மருந்தே வருக! பசும்
கரும்பே வருக! எங்கள் இரு கண்ணே வருக! கண்மணியுள்
கலந்த பாவாய் வருக! சிவம் கமழ்தேன் கலந்துள் அளித்தருத்தும்
கரும்பே வருக! முத்திநெறித் துணையே வருக! பவம் தொலைக்கும்
சுடரே வருக! தொண்டர்குழாம் தொடும் இராமேசத்தில் உறை
தரும் தேம்கனியே வருக! உயர் தாயே வருக! வருகவே!
சலியாது அருளும் மலைவளர் காதலியே வருக! வருகவே!

சொக்கநாதப் புலவர் பாடிய தேவையுலா ஒன்றும்
இராமேச்சுரம் புகழ்கூறும் வகையில் அமைந்துள்ளது.

## வாழ்த்து

மாது மலைவளர் காதல் வல்லிவாழ்க மாற்கு அருள்கூர்
சிவராமநாதன் வாழ்க!
சேதுவுடன் தனுக்கோடி தீர்த்தம் வாழ்க! திகழ்தீர்த்தம் அறுநான்கும்
சிறந்து வாழ்க
நாதன் இராமேச்சுரனை அருச்சிப்போரும், நல்தானம் தவம்
அனைத்தும் நயந்து வாழ்க!
மாதவர்கள் மிகவாழ்க! இராமநாத மாமுனிவன் நீடூழி வாழ்க மாதோ!

சிவசிவ.

உ

சிவசிவ

## திருப்பனந்தாள் காசித்திருமடம்
## இராமேச்சுரம் கிளை.

திருப்பனந்தாள் காசித்திருமடத்தின் கிளை ஒன்று இராமேச்சுரம் சந்நிதித் தெருவில் அக்னி தீர்த்தம் போகும் வழியில் அமைந்துள்ளது. மிகப் பழைய கட்டிடமாக இருந்த இம் மடத்தினைக் காசித் திருமடத்தின் தற்போது 21-ஆவது அதிபராக அருட்செங்கோலோச்சிவரும் "கயிலைமாமுனிவர்" திருவளர்திரு காசிவாசி முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் ரூ.40 இலட்சம் செலவில் புதுப்பித்துக் கட்டியுள்ளார்கள். மடத்தை ஒட்டிக் குளியலறை வசதியுடன் கூடிய 8 அறைகள் கொண்ட யாத்ரீகர் விடுதி ஒன்றும் கட்டப்பட்டுள்ளது. கிளை மடத்தின் எதிரிலும் வசதிகளுடன்கூடிய மற்றொரு விடுதியும் 10 அறைகளுடன் கட்டப்பட்டுள்ளது.

இக்கிளை மடத்தில் நாள்தோறும் அன்னம்பாலிப்பு நடைபெற்று வருகிறது. சிறப்பு நாட்களில் பெருமளவில் அன்னம் பாலிப்பு நடத்தப்பெறுகிறது. இராமேச்சுரம் புனிதப் பயணம் வரும் அடியவர்கட்கு இத்திருமடம் இயன்ற வகையில் எல்லாம் உதவிவருகின்றது. இராமேச்சுரம் கல்வி நிறுவனங்கட்கும் காசித்திருமடம் நிதியுதவி புரிந்துள்ளது.

இராமேச்சுரத்தில் திருப்பனந்தாள் காசித்திருமடத்தின் சார்பில் அமைக்கப்பட்டுள்ள அறக்கட்டளைகள் பற்றிய விவரம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

## இராமேச்சுரத்தில்
## திருப்பனந்தாள் காசித்திருமடத்தின் சார்பில்
## ஏற்படுத்தப்பட்டுள்ள அறக்கட்டளைகள்

### அன்னம்பாலிப்பு

1. ஸ்ரீ குமரகுருபரர் நினைவு அன்னம்பாலிப்பு.
2. ஆடி, தை அமாவாசை அன்னம்பாலிப்பு.
3. மன்னர் பொம்மராசு நினைவு அன்னம்பாலிப்பு.
4. ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் நினைவு அன்னம்பாலிப்பு.
5. கார்வேட் நகர் மன்னர் நினைவு அன்னம்பாலிப்பு.
6. மார்கழி அன்னம்பாலிப்பு.
7. வெங்கடப்ப நாயுடு நினைவு அன்னம்பாலிப்பு.
8. கோச்செங்கட்சோழன் (மாசி) நினைவு அன்னம்பாலிப்பு.
9. உமாபதிசிவம் நினைவு அன்னம்பாலிப்பு.
10. நித்திய மகேசுவர பூசை.
11. காளத்தி மன்னர் நினைவு அன்னம்பாலிப்பு.
12. ஆவணி மூலம் அன்னம்பாலிப்பு.

***

| | |
|---|---|
| அன்னம்பாலிப்புக்கு மட்டும் - அறக்கட்டளை- மதிப்பு | ... ரூ.3,77,500.00 |
| கல்வி நிதி | ... ரூ. 22,000.00 |
| திருமுறை நிதி | ... ரூ. 51,000.00 |
| விபூதிக்கட்டளை | ... ரூ. 2,000.00 |
| ருத்ரபாராயணம் | ... ரூ. 4,500.00 |

* * *




சமய இலக்கியத் திங்கள் இதழ்

**சந்தா விபரம்**

| | உள்நாடு | வெளிநாடு |
|---|---|---|
| ஆயுள் சந்தா | ரூ.300.00 | ரூ.1000.00 |
| ஆண்டுச்சந்தா | ரூ. 36.00 | ரூ. 200.00 |


அனுப்பவேண்டிய முகவரி:
மேலாளர், காசித்திருமடம், திருப்பனந்தாள் - 612 504.
The Manager, Sri Kasi Mutt, Thiruppanandal - 612 504.
வெளியிடுபவரும் ஆசிரியரும்:- திரு ம.வே.பசுபதி.
அச்சிடுபவர்: திரு தா.ம. வெள்ளைவாரணம்.
ஸ்ரீ குமரகுருபரர் ஆப்செட் பிரிண்டர்ஸ்,
காசித்திருமடம், திருப்பனந்தாள்.
தொலைபேசி: 56655.